# :: வில்லி பாரதத்தில் ::
# :: விநோதத் திருத்தங்கள் ::

ஆசிரியர் :
கி. வேங்கடசாமி ரெட்டியார்
வி. பூதூர்
தென்னார்க்காட்டு மாவட்டம்



உரிமைப் பதிவு] 1962 [விலை 50 ந. பை.

ஸ்ரீ:

# வில்லி பாரதத்தில் வினோதத் திருத்தங்கள்



ஆசிரியர் :
கி. வேங்கடசாமி ரெட்டியார்
வி. பூதூர், தெ. ஆ. மாவட்டம்



உரிமைப்பதிவு] 1962 [விலை 50 ந.பை.

36/3

# அணிந்துரை

'வில்லி பாரதத்தில் விஞேதத் திருத்தங்கள்' என்னும் ஆய்வுக் கட்டுரைக்கு ஓர் அணிந்துரை அளிக்க வேண்டும் என்னும் கட்டுரையாசிரியர் உயர்திரு. கி. வேங்கடசாமி ரெட்டியாரவர்களின் வேண்டுகோளை நான் வரவேற்கிறேன்.

இந்நாளில் தமிழ் மொழியில் வெளி வந்துலவும் நூல்களுட்பல நன்கு ஆய்ந்து பதிப்பிக்கப் பெறவில்லை என்பதை அறிஞர் உலகம் நன்கறியும். ஆய்ந்து பதிப்பார் சிலரும், மதக்கருத்தால் உந்தப் பெற்று, நூலை இயற்றிய ஆசிரியர் கருத்துக்கு முற்றும் முரணுன தத்தம் கருத்துகளை இடையிடையே புகுத்தியும் உண்மைப் பாடங்களை மறைத்தும் நூல்களைப் பதிப்பிப்பதால் மொழிக்கும் நாட்டுக்கும் விளையும் கேடுகளை அவர்தம் மதப் பற்று மறக்கச் செய்வது வருந்தத் தகுவதேயாகும்.

இக்கட்டுரையாசிரியரவர்கள் பெரிதும் முயன்று உண்மைப் பாடங்களைத் தொகுத்தளித்திருப்பதைப் பாராட்டுகிறேன். இக்கட்டுரை அறிஞர் சிந்தனைக்குரிய அரிய கருத்துகளைக் கொண்டு விளங்குவதால் வரவேற்றற்குரியதேயாம்.

காய்தல் உவத்தல் அகற்றி நூல்களை ஆய்தலே அறிவுக்கழகாதலின், கற்றவர் பலரும் தாம் ஆய்ந்தறிந்த கருத்துகளை உலகுக்கு வழங்குவது இன்றியமையாதது.

மே. வீ. வேணுகோபாலப் பிள்ளை

# மதிப்புரைகள்

உயர்திருவாளர் பன்மொழிப் புலவர்
## வே. வேங்கடராஜுலு ரெட்டியாரவர்கள்

பழைய தமிழ் நூல்கள் பலவற்றை அச்சிட்டு வெளிப் படுத்திய யாழ்ப்பாணப் பேரறிஞர் ஸ்ரீலஸ்ரீ ஆறுமுக நாவலரவர்கள் பதிப்பித்த நூல்களுள் பெரும்பாலன சைவ சமய நூல்களேயாகும். அவர்கள் வில்லிபுத்தூராழ்வார் இயற்றிய பாரதத்தையும் பதிப்பித்துள்ளார்கள்.

நாவலரவர்கள் தாங்கள் பதிப்பித்த பாரதப் பதிப்பில் சமயாபிமானத்தினுல் பல இடங்களில் பாடங்களை மாற்றியிருக்கின்ருர்கள் என்பது மற்றைய பதிப்புக்களால் தெரிய வருகின்றது. இது, சங்கப் பதிப்பை வெளியிட்ட அறிஞர் திரு. சேற்றூர், ரா. சுப்பிரமணியக் கவிராயர் அவர்கள் முகவுரையில் தம் பதிப்பைக் குறித்துக் கூறும்போது "..... சுவமதக் கொள்கை பரமத துவேஷம் என்பவற்றையுட் கொண்டு பாடங்களைச் சிதையாமற் பிரதிகளில் உள்ளவற்றை உள்ளவாறே ஆராய்ந்து பிறழாமல் அவைகள் வெளியிடப்பட்டன," என்று எழுதியிருத்தலான் வலியுறும். கவிராயரவர்களும் சில இடங்களில் சமயப்பற்றினுல் பொருளமைதியான பாடத்தை மேற்கொள்ளாமல் பாடவேறு பாடாகக் குறித்திருக்கின்ருர்கள்.

தமிழறிஞர், வி. பூதூர் ஸ்ரீ கி. வேங்கடசாமி ரெட்டியார் அவர்கள் வில்லிபுத்தூராழ்வார் பாரதப் பதிப்புக்களில் பதிப்பாசிரியர்கள் சமயச் சார்பினுல் செய்துள்ள மாற்றங்களுள் பலவற்றை ஆராய்ந்து 'வில்லி பாரதத்தில் வினேதத் திருத்தங்கள்' என்னும் கட்டுரையில் தெரிவித்திருக்கின்ருர்கள். பாரதத்தின் உண்மையான பாடங்களைக் கொண்ட பதிப்பு ஒன்று வெளிவரல் வேண்டுமென்பது அவர்கள் பெருவிருப்பம். இக்கருத்தினைத் தமிழபிமானிகள் வரவேற்பார்கள் என்று நம்புகின்றேன்.

## உயர்திருவாளர் வித்துவான் க. வெள்ளைவாரணனுரவர்கள்

செந்தமிழ்ப் புலமை நலம் நிரம்பியவரும் நவில்தொறும் நூல் நயங்கண்டு மகிழும் திறனும் பயில்தொறும் மிக்குவள ரும் இனிய பண்பும் ஒருங்கு வாய்க்கப் பெற்றவரும் ஆகிய கெழுதகை நண்பர் உயர்திரு. கி. வேங்கடசாமி ரெட்டியார் அவர்கள் எழுதிய 'வில்லி பாரதத்தில் விநோதத் திருத்தங்கள்' என்னும் கட்டுரையைப் படித்து மகிழ்ந்தேன். நண்பர் குறித்தவண்ணம் அருச்சுனன் தவநிலைச் சருக்கம் 113-ஆம் பாடலில் 'பையரவினுடர்' என்பதனைப் 'பையரவினுடி' எனவும், கண்ணபிரான் தூதுச் சருக்கம் 213-ஆம் பாடலில் 'தேவரும் வாசவனும் சிவனும் திசைமுகனும்' என்பதனைத் 'தேவரும் வாசவனும் தவரும் திசைமுகனும்' எனவும், துரோணபருவம் 12-ஆம் போர்ச் சருக்கம் 59-ஆம் பாடலில் 'சிவனுக்கு மலரி லுறை பிரமற்கும்' என்பதனைச் 'சிவமுற்ற மலரிலுறை பிரமற்கும்' எனவும் அச்சிட்டோர் தம் சமயப் பற்றினுல் மாற்றியிருத்தலும் கூடும்.

ஆகவே, இப்பொழுது நமக்குக் கிடைக்கக்கூடியன வாகவுள்ள வில்லி பாரத ஏட்டுச் சுவடிகள் பலவற்றையும் அச்சுப் புத்தகங்களையும் ஒருங்கு தொகுத்து அவற்றின் கால நிலை, எழுதியோர், அச்சிட்டோர் ஆகியவர்களின் சமநிலை, வடமொழியில் மூல நூலின் கதையமைப்புக்கு ஏற்ப அமைந்த தொடர்பு முதலிய குறிப்புக்களைக் கூர்ந்து நோக்கி, வில்லிபாரதத்திற்குத் திருந்தியதோர் புதிய பதிப்பு வெளிவர வேண்டிய இன்றியமையாமையினை நண்பர் திரு. வேங்கடசாமி ரெட்டியாரவர்கள் இக்கட்டுரை வாயி லாக நன்கு வற்புறுத்தியுள்ளார்கள். இங்ஙனம் வில்லி பாரதத்திற்குத் திருந்தியதோர் புதிய பதிப்பு வெளி வருதல் வேண்டும் என்னும் இக்கருத்தினைத் தமிழறிஞர் அனைவரும் உவந்தேற்றுக்கொள்வதுடன் இத்தமிழ்ப் பணியினைச் சிறப் பாக நிறைவேற்றுவார்கள் என நம்புகின்றேன்.

# முன்னுரை

ஸ்ரீவில்லிபுத்தூராழ்வார் அருளிய மாபாரதத்தைப் படித்தபோது எனக்குண்டாய ஐயங்களைத் தெளிவுபடுத்து முகத்தான் யான் எடுத்துக்கொண்ட பெருமுயற்சியின் பயனே இந்த ஆய்வுக் கட்டுரை.

இக்கட்டுரையில் முதலில் இடைப்பிறவரல் போலத் தோன்றும் சில செய்திகளே இதன் முடிபுக்குத் துணை செய்வன என்னும் கருத்துடையேன்; ஆகலின், முதலில் அச்செய்திகளைச் சேர்த்துள்ளேன்.

அறிஞர் உலகம் 'காய்தல் உவத்தல்' அகற்றி, இதனை ஊன்றிப்பார்த்து, நல்லதொரு பாரதப் பதிப்பு வெளி வர உதவவேண்டும் என்னும் வேணவாவுடையேன்.

இதனைக் கடைக்கணித்தும் அச்சுத்தாள்களைத் திருத்தியும் அணிந்துரை வழங்கியும் சிறப்பித்த சென்னை மகா வித்துவான், சிந்தாமணிச் செல்வர், உயர்திரு. மே. வீ. வேணுகோபாலப் பிள்ளை அவர்கட்கும், அடியேனது நன்மையையே கருதுபவரும், இக்கட்டுரையினை முழுதும் நோக்கி ஒரு மதிப்புரையருளியவருமாகிய மயிலைப் பன்மொழிப் புலவர் உயர்திரு. வே. வேங்கடராஜுலு ரேட்டியார் அவர்கட்கும், எனது விருப்பிற்கிணங்கி அன்புடன் மதிப்புரையளித்த கெழுதகை நண்பர் அண்ணாமலைப் பல்கலைக் கழகத் தமிழாராய்ச்சித் துறைத் தலைவர் க. வெள்ளைவாரணனர் அவர்கட்கும் என்றும் தலையலாற் கைம்மாறிலேன்.

மேலும், இக்கட்டுரை அணிபெறச் சில கருத்துக்களைத் தெரிவித்த அன்பர் மாளிகை மேடு திரு. கே. நாராயண ரெட்டியார் அவர்கட்கும், இக்கட்டுரை வெளி வர ஆர்வம் காட்டிய அன்பர் அனைவர்க்கும் யான் என்றும் நன்றி செலுத்துங் கடப்பாடுடையேன்.

தோன்றாத் துணையாயிருந்து என்னை இத்துறையில் ஊக்கிய தமிழ்த் தெய்வத்தை இறைஞ்சுகின்றேன்!

வி. பூதூர்,<br>தெ. ஆ. மாவட்டம்

கி. வேங்கடசாமி.

ஸ்ரீ:
கலைமகள் துணை

# வில்லி பாரதத்தில் வினோதத் திருத்தங்கள்

நம் செந்தமிழ் நாட்டில் பண்டு தொட்டே நிலைபெற்று விளங்குவன வைணவம், சைவம் எனும் இரு பெருஞ்சமயங்களாகும். இவ்விரு பெருஞ்சமயங்களும் நமக்கு இரு கண்கள் போன்று விளங்குவனவாகும். இவ்விரு பெருஞ்சமயங்களிலும் படிப்போர் உள்ளங்களை உருக்குகின்ற தோத்திரங்களும் அறிவியல் நூல்களும் புராணங்களும் பலப்பல உள்ளன. அவ்வச்சமயத்து எல்லா நூல்களும் அவ்வச் சமயத்தோர்க்கு அருமருந்தாவன. அவரவர் சமயத்துள்ள நூல்களை அவரவர் அன்பொடும் நம்பிக்கையொடும் படித்தல் வேண்டும். பிற சமயத்தையோ பிற சமயநூல்களையோ இகழ்தல் கூடாது.

பிற சமயநூல்களைப் பயில வேண்டின், தம் சமயநூலை எவ்வாறு பயில விரும்புவார்களோ அவ்வாறே பிற சமயநூல்களைப் பயில்வதன்றி, அந்நூல்களிற் பொருள் காணுமிடத்து, அச்சமயநூலோர் கருத்துக்கு மாறுபடா வண்ணம் காணுதல் வேண்டும். அங்ஙனம் காணாது, தம் மனம் சென்றவாறே பயின்று, அச்சமயக்கருத்துக்கு மாறாகப் பொருள் கூறுதல் தகுதியன்று.

இந்நன்னோக்கத்துக்கு மாறாகத் தத்தம் சமயப் பற்றினால் (வேறு காரணம் இன்று) நூலாசிரியர் கருத்துக்கு மாறாகப் பொருள் காண்பதும், சமயம் வாய்ப்பின் மூலபாடத்தையே மாற்றுவதும் ஒரு சிலர்க்குப் பண்பாகிவிட்டதென்பது தெரிகின்றது.

வைணவர்களுட்பெரும்பாலார் தமிழ் நயம் உணராது, இரகசிய நூல்கள் சிலவற்றை ஒருவாறு கற்றதுமே எல்லாம் உணர்ந்தவராகத் தம்மைத் தாமே மதித்துக்கொள்கின்றனர்; தமக்குரிய நாலாயிரத் திவ்வியப் பிரபந்தத்திலுள்ள தமிழ் நயத்தை யுங்கூட அறியாதவர் ஆகின்றனர். அவர்களைப் பற்றி என்ன கூறுவது ?

அவர்கள் வைணவப் பெருமக்களாகிய கவிச் சக்கரவர்த்தியார் கம்பர், புகழேந்திப் புலவர், வில்லி புத்தூரர், பிள்ளைப்பெருமாளையங்கார், அரிதாசர் முதலிய பெரியோர்களருளிய நூல்களையும் போற் றத் தவறிவிட்டார்கள். தமிழ் வைணவர்களின் நிலை மிக்க பரிதாபத்துக்கு உரியதாய்விட்டது.

பிற்கால அந்தணப் பெருமக்களும் 'தமிழர், தமிழ் நூல்கள்' என்று இவ்வாசிரியர்களையும் நூல் களையும் ஒதுக்கிவிட்டார்கள். முற்காலச் சமய நூலாசிரியர்களும் உரையாசிரியர்களும் தமிழ் நயத் தையும் தமிழர் பண்பாட்டையும் நன்றாக உணர்ந்த வர்களென்பது அவர்கள் வாக்காலும் உரைகளா லும் நன்கு அறிகின்றோம். அவ்வுரைகளில் ஆங் காங்குக் குறுந்தொகை, முத்தொள்ளாயிரம், திருக் குறள், கம்பராமாயணம் முதலிய நூல்களிலிருந்து மேற்கோள்கள் காட்டப்பட்டுள்ளன. அவற்றைப்

பயின்ற தமிழறிஞர் இதனை நன்குணர்வர். அப்படியிருந்தும், தமிழுணர்ச்சி குன்றிய இக்கால வைணவ மக்கள், காலவயத்தால் தமிழ் நூல்களைப் புறக்கணித்துள்ளமைக்குக் காரணம் நம் தீயூழன்றி வேறென்னென்பது?

இந்நிலையில் சமயப் பற்றும் தமிழ்ப் பற்றும் இணைந்து அவ்விரு பற்றுக்களுமே உருவங் கொண்டாற்போல விளங்கும் சைவப் பெருமக்கள், தமிழுணர்ச்சிக்காக வைணவத் தமிழ் மக்களருளிய நூல்களையும் பயின்று, எல்லோரும் படிக்கும் வண்ணம் வைணவத் தமிழ் நூல்களை வெளியிட்டுமிருக்கின்றார்கள்.

அச்சைவப் பெருமக்கள் இல்லாவிடில் ஸ்ரீவில்லிபுத்தூராழ்வார் அருளிய பாரதமும், புகழேந்தியார் அருளிய நளவெண்பாவும் அக்காலத்தில் வெளிவந்திருக்க மாட்டா. அப்பெருமக்கள் சமய நூல்களைப் போற்றுவது போலத் தமிழ் நூல்களையும் போற்றுவது பொதுவாகத் தமிழ் நாட்டினரின் தவப்பயன் என்றுதான் சொல்ல வேண்டும். அப்பெருமக்களுக்குத் தமிழ்நாடு காலம் உள்ளளவும் நன்றி செலுத்தும் கடப்பாடுடையதாகும்.

வைணவவுலகத்தே மிகச்சிறந்து செல்வாக்குடன் விளங்கியவர்கள் பெரும்பாலும் அந்தணப் பெருமக்களேயாவார்கள். தமிழிலும் அந்தணப் பெருமக்கள் வல்லவர்களாய் இருந்ததுமன்றித் தமிழை வளர்த்த பெருமையிலும் பங்கு கொண்டிருந்தார்கள். எனினும், அவர்களுட்பலர் திவ்வியப் பிரபந்தத்தையும் அதன் நயமிக்க உரைகளையும் பயின்று, மறந்தும் பிற தமிழ் நூல்களைக் கண்ணெ

டுத்தும்பாராது, தம்மைச் சார்ந்தாரையும் தம்மைப் போலவே ஆக்கிவிட்டனர். இது போன்று சைவ சமயத்துறையில் செல்வாக்குடன் விளங்கிய அந் தணப் பெருமக்களோ, அந்தணத் துறவிகளோ இல்லை. அந்தணரல்லாத சைவப் பெருமக்களே தமிழ் நாட்டில் விளங்கி வருகின்றார்கள். அவர்க ளுக்கு மிக்க செல்வாக்குண்டு. அதுகொண்டு அப் பெருமக்கள் தமிழை வளர்க்கவும் பாதுகாக்கவும் மிக முயன்று, தமிழ்த்தாயைப் பொன்னே போலப் போற்றி வருகின்றார்கள். அவ்வாய்ப்பு அந்தணரல் லாத வைணவ மக்களுக்கின்மையானும், வைணவ அந்தணப் பெருமக்களுக்குத் தமிழில் போதிய ஆர்வமின்மையானும் வைணவ சமயத்துக்குரிய அரும்பெறல் தமிழ்நூல்களைப் போற்ற இயலவில்லை போலும்!

அதனால், அழிந்தே போயிருக்கக்கூடிய சில வைணவத்தமிழ் நூல்கள் சைவப் பெருமக்க ளால் காக்கப்பட்டன என்று கொள்ளவேண்டும். அவர்கள் அத்தமிழ் நூல்களைக்காக்கும் துறையில் முயன்று, தம் சைவ சமயத்துக்கு ஏற்றமாகச் சில பாடல்களைத் திருத்தியும், சில பாடல்களைக் கூட்டி யும், சில பாடல்களை நீக்கியும் வெளியிட்டிருக்கின் றார்கள். 'நம் சமயப்பற்றைக் காண்பிப்பதில் தவ றென்ன?' என்று கருதினார்கள்போலும்! அதைத் தான் வைணவர்களுள் ஒருவரும் கவனிப்பார் இல்லையே!

வைணவ ஐயங்கார்களுட் சிறந்தவராகிய ஸ்ரீ வில்லிபுத்தூராழ்வார் அருளிய பாரதத்தை அச்சிட்ட சைவர் சிலர் தம் சமய ஏற்றத்துக்

குரிய முறையில் பல பாடல்கள் இயற்றிப் புகுத்தியும் சில பாடல்களைத் திருத்தியும் அதனை வெளிப்படுத்தியதன்றி, 'அவ்வாழ்வார் பொது நோக்குடையவர்; அதனால், சிவபிரானைச் சொல்லும்போது சைவப் பெருமக்கள் சொல்லுவது போலவே சொல்லியிருக்கின்றார்,' என்று வில்லிபுத்தூராழ்வாரைச் சிறப்பித்துக் கூறுபவர்கள் போலக் காட்டுகின்றார்கள். அப்படிக் காட்டுகின்ற அச்சைவப் பெருமக்கள், சமயவெறி கொள்ளாத பொதுநோக்குடைய சைவப் பெருமக்களுள் சிலரையேனும் நமக்கு அறிமுகப்படுத்துவார்களாயின், நாம் அவர்கள்பால் மிக்க நன்றியுடையவர்களாயிருப்போம்.

மேலும், வைணவப் பெருமக்களைப் பொது நோக்குடையவர்கள் என்றும், வைணவப் பெருமக்களுள் பலரும் சைவப் பெருமக்களுடன் வாதாடித் தோற்றனர் என்றும் நம்பும்படியான கதைகளைக் கட்டிவிட்டனர். இச்செயல்கள் உண்மை என்பது, கீழ்க்காணும் சிற்சில குறிப்புக்களால் உணரலாம். இக்குறிப்புக்களின் பின், பாரதத்தில் சைவப் பெருமக்கள் தம் சமயத்திற்கேற்றமுறுமாறு திருத்தங்கள் செய்ததும் உண்மையேயாம் என்பதைத் தகுந்த சைவப் பெருமகனார் ஒருவர் வாயிலாகவே காட்டி, முன்னோர்கள் கண்ட அத்திருத்தங்களுக்கான சரியான பாடங்களையும் பின்னால் தருகின்றேன். இவ்வளவும் எழுதுவதற்குக் காரணம், சரியான வில்லி பாரதப் பதிப்பு ஒன்று வெளிவரவேண்டும் என்கின்ற பேரவாவேயாகும்.

நாலாயிரத் திவ்வியப் பிரபந்தத்திலும் சில பாடல்களுக்கு ஆழ்வார் ஆசாரியர்களின் திரு வுளத்துக்கு மாருகச் சைவப் பெருமக்கள் கூறிய பொருள்களையும் அவற்றிற்குச் சரியான மறுப்பாகக் கோமளபுரம் இராசகோபாலப் பிள்ளையவர்கள் எழுதிய திரவிட வேத விபரீதார்த்த திரஸ்காரம் என்ற நூலிலும், புவனகிரி ஸ்ரீமதித்யாதி அழகிய மணவாள ராமாநுஜ ஏகாங்கி சுவாமிகள் அருளிய 'நாலாயிரத் திவ்யப்ரபந்த விசார ஆபாச தர்ப்பணம்' என்ற நூலிலும் உண்மைப் பொருள்களையும் காணலாம்.

முதன்முதலாகப் பொது நோக்குடையவரும் நீதி நூல்கள் பல அருளியவருமான ஔவையாரைக் காண்போம் :

ஆத்திசூடியில் 'திருமாலுக்கடிமை செய்,' என்ற வாக்கியம் உளது. அதனை யாவரும் அறி வர். அதில் சிவபெருமானைப்பற்றி ஒரு வாக்கிய மும் இல்லை. அப்படியிருக்கவும், சில ஆண்டுக ளாக ஆரம்பித்து நடத்திவரும் 'திருப்பாவை, திரு வெம்பாவை ஆறங்க மாநாடுகளுக்கு' ஆசிச் செய் தியாக ஸ்ரீ சங்கராசாரிய சுவாமிகளால் அனுப்பப் பெற்ற திருமுகத்தில் "திருமாலுக்கடிமை செய்" என்று சொன்ன ஔவையார், 'அரனை மறவேல்,' என்று சொன்னது காண்க,' எனப் பொருள்படும் வாக்கியம் உள்ளது. நெடுங்கணக்கில் உள்ள வாறே ஒவ்வோர் எழுத்திற்கும் ஒவ்வொரு வாக் கியம் அமைத்த முறையில், ளகரத்தையடுத்த றகரத்திற்கு 'அறனை மறவேல்' என்பது கூறப் பட்டது. அறன் - தருமம். ரகரத்திற்கு 'அரவ

மாட்டேல்' என்று மேலே வந்திருத்தல் காண்க. அறிஞர் இதனை நன்கறிவர்.

மேலும், கொன்றை வேந்தனில் 'சினத்தைப் பேணில் தனத்திற்கழிவு' என்று திருநெல்வேலிப் பிரதிகளில் உள்ளதாகப் பேராசிரியர் கா. நமச்சிவாய முதலியார் தாம் பதித்த 'தமிழ்க்கடல்' வெளியீட்டில் குறித்துள்ளார். அது 'சிவத்தைப்பேணில் தவத்திற் கழகு,' என்று ஆகியிருக்கிறது.

என் ஆசிரியர்க்கொப்பான ஒரு பெரியார் இல் லத்திற்கு யான் ஒரு சமயம் சென்றிருந்த போது அப்பெரியார் தம் கையில் 28 நெ. பஞ்சாங்கம் ஒன்று வைத்திருந்தார். அது அட்டை இடப்பட் டிருந்தது. அவ்வட்டையில் முகப்பில்,

"அடுத்து முயன்றாலும் ஆகுநா ளன்றி
எடுத்த கருமங்கள் ஆகா—தொடுத்த
உருவத்தால் நீண்ட உயர்மரங்க ளெல்லாம்
பருவத்தால் அன்றிப் பழா."

என்ற பாட்டும்,

"நாரா யணவென்னு நல்ல மருந்திருக்க
வேறோர் மருந்துனக்கு வேண்டுமோ—சீராக
நாவிலே அம்மருந்தை நன்று யுரைத்தக்கால்
பாவங்கள் போமே பறந்து."

என்ற பாட்டும் எழுதப்பெற்றுக் கீழே 'நல்வழி' என்று எழுதப்பட்டிருந்தது. அதைக்கண்டு வியப் புற்ற யான், அவரை, 'இப்பாடல் எதிலுள்ளது?' என்று கேட்டேன். 'இதுகூடத் தெரியாதா, 'நல்வழி' என்று கீழே எழுதியும்?' என்று புன்னகை யோடு கேட்டார். யான் சொல்வதற்கு என்ன இருக்கிறது?

நீதி நூலில் சமயக்கருத்தைப் புகுத்தாமல் இருப்பது பலர்க்கும் பயன்படுமென்று கருதி அக் கருத்தைப் புகுத்துவதில்லையெனினும், 'காப்புக்கு முதலெடுக்கும் கடவுள்தான் மாலேயாகும்,' என்ற பிற மதத்துச்சான்றோர் கூறியபடி ஒரு வேளை திருமாலைப்பற்றிக் கூறியிருக்கலாம், 'திருமாலுக்கடிமை செய்,' என்பது போன்று. அப்படியிருக்க, இப் பொழுது, 'நாராயணா . . . . . போமே பறந்து' என்ற பாடலுக்கீடாக,

" சிவாய நமஎன்று சிந்தித் திருப்பார்க்
கபாய மொருநாளு மில்லை ;—உபாயம்
இதுவே மதியாகும்; அல்லாத எல்லாம்
விதியே மதியாய் விடும்."

என்ற பாடல் காணப்படுகிறது; 'நாராயணா . . . . . பறந்து,' என்ற பாடல் காணப்படவில்லை.

ஔவையார் அருளிய தனிப்பாடல்களிலும் ஓர் அரசன் கேட்ட, 'அரியது, பெரியது, கொடியது, இனியது எவை ?' என்ற கேள்விக்கு விடையாக, அரசனை முன்னிலைப்படுத்தி, 'வரிவடி வேலோய்', 'எரிதவழ்வேலோய்', 'நெடியவெவ்வேலோய்', 'தனிநெடுவேலோய்' என்று கூறிய ஒன்றையே கொண்டு, 'வேலுடைய முருகக்கடவுளே ஔவை யாரிடம் நேரில் கேட்டு விடை கண்டு மகிழ்ந்த னன்,' என்று புனைந்து கதையாக்கிவிட்டனர்.

'வெற்றி வேற்கை' அருளிய சைவப் பெருமகனாரகிய அதிவீரராம பாண்டியனாரும், தம் நீதி நூலில் சமயச்சார்பான ஒன்றையும் குறிப்பிடாமை நோக்கத்தகும்.

கம்பநாடரும் நாட்டரசன் கோட்டையில் தம் பூத உடலை நீத்தார் எனக்கொண்டு, ஆங்கு இலிங்கவழிபாடு நிகழ்வது கண்கூடு.[1]

ஔவையார் அருளிய தனிப்பாடல் சிலவற்றிற் குத் தலைப்புக் காட்டுவது போலக் 'கம்பரை அரசன் வியந்தபோது பாடியது' என்று எழுதியிருப்பதை யும் காணலாம்.

மேலும், தனிச் செய்யுட்சிந்தாமணியில் 'ஔவையார்' என்ற தலைப்பில் உள்ள பாடல் களில், 'சோழன் இவரை மதியாமற் கம்பர் பாட்டை வியந்த போது பாடியது' என்ற தலைப்பில்,

"விரகர் இருவர் புகழ்ந்திடவே வேண்டும்
விரல்நிறைய மோதிரங்கள் வேண்டும்—அரையதனில்
பஞ்சேனும் பட்டேனும் வேண்டும் அவர்கவிதை
நஞ்சேனும் வேம்பேனும் நன்று!"

என்ற பாடலும், 'சோழன், 'கம்பர்போற் காவியம் பாடுவோர் இல்லை,' என்ற போது பாடியது' என்ற தலைப்பில்,

"வான்குருவி யின்கூடு வல்லரக்குத் தொல்கறையான்
தேன்சிலந்தி யாவர்க்கும் செய்யரிதால்;-யாம்பெரிதும்
வல்லோமே என்று வலிமைசொல வேண்டாங்காண்
எல்லார்க்கும் ஒவ்வொன் றெளிது."

"சித்திரமும் கைப்பழக்கம் செந்தமிழும் நாப்பழக்கம்
வைத்ததொரு கல்வி மனப்பழக்கம்—நித்தம்
நடையும் நடைப்பழக்கம் நட்பும் தயையும்
கொடையும் பிறவிக் குணம்."

---

1. 'இவரை நாட்டரசன் கோட்டையில் வைணவ ஸம்ப்ரதாயத்தின்படி சமாதி செய்திருக்கிறது. இதனை இன்றும் காணலாம்.'—'கம்ப நாடர்'—தி. செல்வக் கேசவ ராய முதலியார், பக். 90.

என்ற பாடல்களும், 'சோழன் 'கம்பரை வெல்வார் யார்?' என்ற போது பாடியது' என்ற தலைப்பில்,

"காணுமல் வேணதெல்லாம் கத்தலாம்; கற்ருேர்முன்
கோணுமல் வாய்திறக்கக் கூடாதே;—நாணுது
பேச்சுப்பேச் சென்னும் பெரும்பூனை வந்தக்கால்
கீச்சுக்கீச் சென்னும் கிளி."

என்ற பாடலும், 'சிலம்பி என்னும் தாசியிடம் 500 பொன் பெற்றுக் கம்பர் பாடிய முற்பாதியோடு பிற்பாதியை இவர் கூழுக்குப் பாடியது' என்ற தலைப்பில்,

"தண்ணீருங் காவிரியே தார்வேந்தன் சோழனே
மண்ணு வதுஞ்சோழ மண்டலமே—பெண்ணுவாள்
அம்பர்ச் சிலம்பி அரவிந்தத் தாளணியும்
செம்பொற் சிலம்பே சிலம்பு."

என்ற பாடலும், 'இதைக் கண்டு கம்பர் பொருமை யால் ஔவையாரை 'அடி' என்று சொல்ல விரும்பி, 'ஒரு காலடி, நாலிலைப் பந்தலடி' என்று சிலேடை யாகச் சொல்லிப் பொருள் கேட்ட போது பாடியது' என்ற தலைப்பில்,

"எட்டேகால் லட்சணமே எமனே றும்பரியே
மட்டில் பெரியம்மை வாகனமே—முட்டாளே
கூரையிலா வீடே குலராமன் தூதுவனே
ஆரையடா சொன்னு யது."

என்ற பாடலும், அருணகிரிநாதர் என்ற தலைப்பின் கீழ், 'வில்லிபுத்தூராழ்வார் சிவாலயம் தோற்றும விருக்கத் திரையிட்டுச் சென்ற போது பாடியது' என்ற தலைப்பில்,

"புரத்தைநர சிங்கத்தைப் போர்வேளைக் கூற்றை
எரித்தவர்க்குத் தாச னெதிரே—நிரைத்தபுகழ்த்
தேன்கொட்டும் சோணகிரித் தேசிகனைப் போற்றுமல்
ஏன்கெட்டுப் போரு னிவன் ?"

என்ற பாடலும் காணப்படுகின்றன.

மேலும், 'திருஞானசம்பந்த சுவாமிகள்' என்ற தலைப்பின் கீழ், 'இவர் சீகாழியில் திருமங்கையாழ்வாரைச் சந்தித்த போது சொல்லியதாக வழங்குங் கவி' என்ற தலைப்பில்,

"கடியுண்ட நெடுவாளை கராவிற் றப்பிக்
கயத்துக்கு ளடங்காமல் விசும்பிற் பாய
அடியுண்ட உயர்தெங்கின் பழத்தாற் பூகம்
அலையுண்டு குலைசிதறும் ஆலி நாடா !
படியுண்ட பெருமாளைப் பழித்துப் பாடிப்
பதம்பெற்ற பெருமானே ! தமியேன் பெற்ற
கொடியொன்று நின்பவனிக் கெதிரே சென்று
கும்பிட்டா ளுயிரொன்றும் கொடுவந் தாளே."

என்ற பாடலும், 'திருமங்கையாழ்வார்' என்ற தலைப்பின் கீழ், 'இவர் திருஞானசம்பந்தரைச் சீகாழியிற் சந்தித்த போது சொல்லியதாக வழங்கும் கவி' என்ற தலைப்பில்,

"வருக்கைநறுங் கனிசிதறிச் செந்தேன் பொங்கி
மடுக்கரையிற் குளக்கரையில் மதகில் ஓடப்
பெருக்கெடுத்து வண்டோலஞ் செய்யுங் காழிப்
பிள்ளையார் சம்பந்தப் பெருமாள் கேளீர்:
அருட்குலவு மயிலைதனி லனலால் வெந்த
அங்கத்தைப் பூம்பாவை யாக்கி னேம்என்
றிருக்குமது தகவன்று; நிலவால் வெந்த
இவளையுமோர் பெண்ணுக்க லியல்பு தானே."

என்ற பாடலும் காணப்படுகின்றன.

இத்தலைப்புக்களில், மேல், ஔவையார் பாடல்களுக்கு இட்ட தலைப்பிலும், அருணகிரிநாதர் பாடலுக்கு இட்ட தலைப்பிலும் 'பாடியது', 'பாடியது' என்று குறித்த பதிப்பாசிரியர், திருஞானசம்பந்த சுவாமிகள், திருமங்கையாழ்வார் இவர்கள் பாடல்களுக்கு மட்டும் 'சொல்லியதாக வழங்குங் கவி' என்று தலைப்பிட்டதைக் கவனிக்குமிடத்தில், அத் தனிச் செய்யுட்சிந்தாமணியுடையார் கருத்து அம்பலமாகிவிடுகின்றதன்றோ ?

முன் காட்டிய பாடல்களின் தலைப்பில் பதிப்பாசிரியரே நேரிற்கண்டது போலப் 'பாடியது', 'பாடியது' என்று குறித்து, பின் காட்டிய பாடல்களில் மட்டும் 'சொல்லியதாக வழங்குங் கவி' என்ற ஐயத் தலைப்பிடுவதன் கருத்தை ஆராய்க.

இது, கம்ப நாடரைச் சைவராகக் காட்ட முயன்று அதில் வெற்றி காணுதவர்கள், ஔவையார் என்னும் சைவப் பெருமாட்டியாரால் இகழப் பட்டார் என்று புனைந்த கதையாய் இருக்குமோ என்று எண்ண இடந்தருகிறது.

ஔவையார், கம்பநாடர் இவர்களின் சிறந்த பண்புகளை உணர்ந்தவர்கள் இக்கதைகளை ஒரு சிறிதும் நம்பார் அன்றே !

இக்காலத்துப் பொது நோக்கமுள்ள ஆராய்ச்சியாளர்களும் கால வேறுபாடு கருதி, இக்கதைகள் யாவும் பொய்யென்று ஒதுக்கிவிட்டமை கண்டு மகிழ்வெய்துவோமாக.

பின்னர் ஏன் இவற்றைக் காட்டினேன் எனில், இன்னமும் சைவப் பெருமக்களுட்சிலர் இக்

கதையை உண்மைபோல அச்சிட்டு வெளிப்படுத்து வதனாலேதான் என்க.

செல்வாக்குடையவராகிய வி. கோ. சூரிய நாராயண சாஸ்திரியார் என்ற பெரும்புலவர், தாம் பதிப்பித்த நளவெண்பாவின் முகவுரையில் 'ஆசிரியர் புகழேந்தியாரது சமயம்' என்ற தலைப் பில், சைவப் பெருமக்கள் புதியவாகப் புனைந்து சேர்த்த சில துதிப் பாடல்களைப் புகழேந்தியாரே இயற்றியனவாகுமென்ற உறுதி கொண்டு கூறுவன வற்றை நோக்குவோம் :

"………இவர் சிவநிந்தை செய்யாத வைணவர் எனல் ஏற்புடைத்தாம் என்பது. 'சிவநிந்தை செய் யாத வைணவர் இலராலோ !' எனின், அற்றன்று ; சிவநிந்தை செய்யாத வைணவர் சிலரை இக்காலத் தும் யாம் கண்கூடாகக் காண்கின்றேமாக, மத வாத மிகுந்திலா அக்காலத்திற் காண்டற்கென்னை என விடுக்க; அன்றியுமவர் அத்தகையராயிருப்பிற் சிவத்துதி செய்யவே மாட்டாரென்க."

இவற்றையும் கண்ணுடையார் காண்க.

நளவெண்பாவிலுள்ள திருமாலைப்பற்றிய பாடல் களையும் விநாயகர், சிவபெருமான், முருகக் கடவுள் இவர்களைப்பற்றிய பாடல்களையும் கவிநயமுணர்ந் தவர் காண்பாராயின், கண்ட துணையானே இவை புதுவது புனைந்தவையே என்பதை ஐயமின்றி எளிதில் உணர்வார்.

இனிச் சிலப்பதிகாரம், மணிமேகலை இவற்றுக்கு இக் காலத்து உரை வகுத்த நாவலர் ந. மு. வேங்கடசாமி நாட்டார் அவர்கள் ஆற்றல் உடையவர்கள் ; அப்

பெரியார் இவை இரண்டிற்கும் தெளிவுரை வகுத்து வெளியிட்டமை போற்றத் தக்கதேயாம். சைவ நூல்களுக்கு உரையெழுதித் தம் சமயக் கருத்தை அதில் விளக்குவது தக்கது. அது விடுத்து, மேற் கூறிய இரு சீரிய நூல்களிலும் சில இடங்களில் நூலாசிரியர்கள் கருத்துக்கு மாருக உரை வகுத்து வெளியிட்டுள்ளார். அதற்குக் காரணம் சமயப் பற்றேயன்றி வேறன்று. அதனைக் காண்போம் :

சிலப்பதிகார ஆசிரியர் இளங்கோவடிகள் சைவரோ சமணரோ என ஐயங்கொண்டாலும், சமணர் என்பதற்கே சிறந்த சான்றுகள் உள்ளன. ஆயினும், பிற சமயத் தெய்வங்களைக் கூறுமிடத்து அவ்வச்சமயத்தவர் கூறுவது போன்றே அவ்வச் சமயக் கருத்துக்கு முரண்படாவாறு மிக நயமாக வும் கூறுவர். அதனைச் சிலப்பதிகாரம் முழுவதி லும் காணலாம். அன்றியும், அக்காலத்துப் பொது வாக எச்சமயத்தவரும் திருமாலைக் காவற்கடவு ளானமை பற்றி முதன்முதல் வணங்குவது வழக் கம் என்பது தெரிகின்றது. சைவ சமயத்தைச் சார்ந்த பிள்ளைத்தமிழ் நூல்களிலும் முதலில் திரு மால் வணக்கம் கூறுவதை இன்றும் காணலாம். திருமுருகாற்றுப்படையிலும் (அடிகள் 148–159),

'கடுவொ டொடுங்கிய தூம்புடை வாலெயிற்
றழலென உயிர்க்கும் அஞ்சுவரு கடுந்திறல்
பாம்புபடப் புடைக்கும் பல்வரிக் கொடுஞ்சிறைப்
புள்ளணி நீள்கொடிச் செல்வனும் வெள்ளேறு
வலவயின் உயரிய பலர்புகழ் திணிதோள்
உமைஅமர்ந்து விளங்கும் இமையா முக்கண்

மூவெயில் முருக்கிய முரண்மிகு செல்வனும்
நூற்றுப்பத் தடுக்கிய நாட்டத்து நூறுபல்
வேள்வி முற்றிய வென்றடு கொற்றத்து
ஈரிரண் டேந்திய மருப்பின் எழில்நடைத்
தாழ்பெருந் தடக்கை உயர்த்த யானை
எருத்தத் தேறிய திருக்கிளர் செல்வனும்'

என முதலில் திருமாலைக் கூறியுள்ளமை நோக்கத் தகும்.

இது போலக் கதைத் தலைவனாகிய கோவலன், காடுகாண் காதைப் பகுதியில் 'நீள்நெடு வாயில் நெடுங்கடை கழிந்தாங்-கணிகிள ரரவின் அறிதுயி லமர்ந்த-மணிவண்ணன் கோட்டம் வலஞ்செயாக் கழிந்து' என்று முதலில் திருமால் கோயிலை வலம் வந்தான் என்று கூறுவதனால் ஆசிரியரது நடுவு நிலை விளங்கும். இங்ஙனம் இருப்பதை உணர்ந்த வரும் நூலாசிரியர் கருத்தை ஆய்ந்து உரை எழுது பவரும் சைவப் பெருமகனுருமாகிய அடியார்க்கு நல்லார், கடலாடு காதை அடி 35ல் 'மாயோன் பாணியும்' என்றவிடத்து, 'இதனுள் இறைவனை முற்கூறுது மாயோனை முற்கூறியதென்னையோ எனின், மாயோன் காவற்கடவுளாய் அருளை அருத்தலான்,' என்று விதந்தெழுதியிருக்கின்றார். இதனுல் அச்சைவப் பெருமகனுராய அடியார்க்கு நல்லாரின் நடுவு நிலைமையைக் காணலாம். இவ் விடத்து இந்நூலுக்குத் தெளிவுரை எழுதிய திரு. நாட்டார் அவர்கள், ஒன்றும் கூருது, முன்னோர் கருத்தையும் விளக்காது, வாளா விடுத்தனர். எனினும், மேற்படி காதையில் (அடி 40—44)

'திரிபுரம் எரியத் தேவர் வேண்ட
எரிமுகப் பேரம் பேவல் கேட்ப
உமையவ ளொருதிற னாக ஓங்கிய
இமையவ னுடிய கொடுகொட்டி யாடலும்
*   *   *
அயிராணி மடந்தை ஆடிய கடையமும்'

என்ற இடத்து அடியார்க்கு நல்லார் வாளா கூறிச் செல்லவும், சிவபிரானை முற்கூறியமை கருதி நம் திரு. நாட்டார் அவர்கள், 'அவரவர் தகுதிக்கேற்ப முறைப்படுத்தினமை காண்க,' என்றெழுதியுள்ளார் கள். இதில் இறைவனாகிய சிவபெருமானை முதலில் வைத்தமை அவர் தகுதிக்கேற்ப என்று வரைந்த மையும் 'மாயோன் பாணியும்' என்ற முற்பகுதியில் திருமாலை முற்கூறியமை பற்றி வாளா விட்டமை யும் நோக்கின், இவர்களது சமயப்பற்று எப்படி வேலை செய்கின்றது என்பது விளங்குமன்றோ?

மேலும், இந்திரவிழவூர் எடுத்த காதையில் (அடி 174—175),

'மாமுது முதல்வன் வாய்மையின் வழாஅ
நான்மறை மரபிற் றீமுறை'

என்னுமிடத்து 'வேதத்திற்குரிய ஓமங்கள்' என்று பொருள் கொள்ள வேண்டுதலின், சிறந்த உரை யாசிரியரும் சைவப் பெருமகனுமாகிய அடி யார்க்கு நல்லார், 'மாமுது முதல்வன்' என்ற சொற் றொடர்க்கு 'நான்மறைக்குரிய வேதா' எனப் பொருள் எழுதியிருப்பவும், நம் நாட்டாரவர்கள் 'மாமுது முதல்வன்' என்ற சொற்றொடர்க்குச் சிவ பெருமான் என்றே உரை எழுதினமை நோக்கின், இவர்களது பற்று மேலும் விளங்குமன்றோ?

இச்சிலப்பதிகாரத் தொடர்புடைய மணிமே கலை ஆசிரியர், கூலவாணிகன் சீத்தலைச் சாத்தனர் என் னும் பெயரினர்; சிலப்பதிகார நூலாசிரியரின் சீரிய நண்பர்; எல்லாச் சமயங்களிலும் நுழைந்து அதனதன் சீரிய உண்மைக் கருத்துக்களை முற்றும் உணர்ந்தவர். இவர்தம் நூலில் உலக அறவி புக்க காதையில்,

> ''நெடியோன் மயங்கி நிலமிசைத் தோன்றி''

என்ற அடியில் வைணவச் சமயத்தின் சீரிய கருத் தினை வெளியிட்டுள்ளார். அக்கருத்து என்ன எனின், சைவப் பெருமக்களால் 'செத்துப் பிறக்கும் தெய்வம்' என்று இகழ்ச்சிக்குரியதாகக் கொள்ளப் பட்ட சீரிய அவதார நிலைதான் மற்ற எச்சமயங்கட் கும் இல்லாத தனிப்பெருஞ்சிறப்பாக வைணவப் பெருமக்களால் போற்றப்படுவதாகும் என்பது.

இவ்வவதாரமும் எம்பெருமான் தான்கொண்ட கோலத்திற்கேற்ப மக்களோடு ஒன்றுபட்டுக் கலந்து, தான் வேறு, உலகத்தினர் வேறு என்று அறியாவண்ணம் ஒருநீராகக் கலந்திருந்த அரு மையில் சிறப்புற்றதாகும்.

இதனை அறிவிக்கவே ஆசிரியர் 'நிலமிசை மயங்கி' உலகினரோடு தான் வேறு அவர்கள் வேறு என்று தோன்ரு வண்ணம் ஒரு நீராகக் கலந்து என்ற பொருள்படக் குறித்துள்ளார்.

'மயக்கம்' என்பதற்குக் 'கலத்தல்' என்னும் பொருளுண்மையை அறியார் யாருமிலரே! 'இடை நிலை மயக்கம்', 'திணை மயக்கம்' என்ற இடங்களில்

இன்னம் விளங்கக் காணலாம் அன்றே! தொண்ட ரடிப்பொடியாழ்வார் அருளிச்செய்த திருப்பள்ளி எழுச்சியில் 7-ஆம் பாசுரம்,

> "........சுந்தரர் நெருக்கவிச் சாதரர் நூக்க
> இயக்கரும் மயங்கினர்........"

9-ஆம் பாசுரம்,

> "மாதவர் வானவர் சாரணர் இயக்கர்
> சித்தரும் மயங்கினர்........"

என்ற இடங்களில் கலந்தனர் என்ற பொருளி லேயே 'மயங்கினர்' என்ற சொல்லைப் பெய்துள்ள மையும் காணலாம்.

இங்ஙனம் இருக்கவும், அப்பொதுநூலின் சில உண்மைக் கருத்துக்களைத் தெரிந்துகொள்ளும் விருப்பமும் இன்றித் தம் மனத்தின்கண் ஊறி யிருந்த தம் சைவப்பற்றுக்கேற்றவாறு நம் நாட் டார் அவர்கள் ஈங்கு உரை வகுத்திருக்கின்றூர்கள்.

அவ்வுரை—'திருமால் மயக்கத்தால் நிலமிசை இராமனுய்த் தோன்றி' எனப் பதசாரமும், விளக்க உரையில், 'மயங்கி—அவிச்சையான் மயங்கி; 'இருணீங்கி இன்பம் பயக்கு மருணீங்கி—மாசறு காட்சியவர்க்கு,' என்பதனுல் அவிச்சை பிறப்பிற் குக் காரணமாதல் அறிக; நெடியோன் தோன்றி மயங்கி என மாற்றி, திருமால் இராமாவதாரத்தில் பருவத முனிவரும் நாரத முனிவரும் அம்பரீட னுக்கு இட்ட சாபமாகிய இருளைத் தான் ஏற்றுக் கொண்டமையால், அதனுல் மூடப்பட்டுத் தன்னை மாயன் என்று அறியாது மயங்கி இருந்தனன் என் னும் இலிங்க புராணக் கதையையேற்றி உரைப்

பாரும் உளர். (இக்கருத்து மகாமகோபாத்தியாய டாக்டர் உ. வே. சா. ஐயர் அவர்களுடையது.) இனி மயங்கி என்பதற்குச் சீதையைப் பிரிந்து கையாறெய்தி என்றுரைத்தலுமாம்,' என்பதாகும்.

'இக்கருத்து நூலாசிரியருடைய கருத்தாகுமா, அன்றி உரையாசிரியர் கருத்தாகுமா?' என்பதை எளிதிற்காணலாமன்றே? இதனால், சமயம் வாய்ப் புழி எல்லாம் தம் சமயக் கருத்துக்களைப் பிறசமய நூல்களுட்புகுத்தும் வழக்கம் சைவப் பெருமக்க ளுட்சிலர்க்கு உண்டு என்பதை அறிந்தோம்.

தம் சமயப் பற்றைப் பிறசமய நூலிற் காட்டு வது தகாது என்ற கொள்கையினால் இதனைத் தெரி விக்கின்றேனேயன்றிச் சமயப்பற்றுக் கூடாது என் னும் கருத்துடையேனல்லேன். சமயப்பற்றானது பிற நூல்களிலுள்ள நல்ல கருத்தையும் அறிய முடி யாதபடி செய்யும் என்பதை உணர்த்துவதற்காக, இத்துறையில் சில சைவப் பெருமக்கள் செய்துள்ள தொண்டையும் காட்டினால் இதனுண்மை விளங் கும் என்னும் கருத்தும் உடையேன்.

இப்பொழுது பூமிதானம், உழைப்புத்தானம் முதலிய தானங்கள் வாங்குவதிற் பெயர் பெற்ற பெரியார் வினோபாஜீ அவர்களின் பிரார்த்தனைப் பிர சங்கங்களில் ஒரு பிரசங்கத்தின் பகுதி:

பிரசங்கம் 5. (வைஷ்ணவ ஜனதோ) 20-5-49.

"வைஷ்ணவ ஜனதோ தேனே கஹியே" என்ற குஜராத்திப் பாட்டு, காந்திஜிக்கு மிகவும் பிரியமானது. இந்தப் பாட்டின் மூலமாக அவ ருக்கு ஊக்கமும் உற்சாகமும் ஏற்பட்டு வந்தன.

கீதையின் 12 ஆவது அத்தியாயத்தில் பக்தனிடம் எந்தெந்தக் குணங்கள் இருக்குமென்று சொல்லப் படுகின்றனவோ, அவையே இந்தப் பாட்டிலு மிருக்கின்றன. காந்திஜிக்கும் இந்தப் பாட்டிற்கும் உள்ள சம்பந்தம் காரணமாக இது இந்தியாவெங் கும் பரவிவிட்டதோடு சில இந்திய பாஷைகளில் மொழி பெயர்க்கப்பட்டுமிருக்கின்றது. இத்தகைய தமிழ் மொழி பெயர்ப்பொன்றை நான் இங்கே வந்த பொழுது கேட்டேன்.

### பழைய பாட்டுக்களை மாற்றுதல்

"ஆனல், அதில் ஓரிடத்தில் 'சொல்லுவோம் வைஷ்ணவன்' என்று வருவது மறுமுறை பாடப் பட்ட பொழுது, 'சொல்லும் அன்பினன்' என் றிருந்ததைக் கண்டேன். இரண்டிற்குமே கடவு ளின் பக்தன் என்றுதான் பொருள். ஆனல், அவ் வாறு ஏன் மாற்றப்பட்டது என்ற சந்தேகம் என் மனத்தில் எழுந்தது. இவ்வாறே மூலப் பாட்டில் 'பக்தன் ராமநாமத்தில் ஒன்றிவிடுகின்ருன்' என்று வருமிடத்தில் உள்ள 'ராமன்' என்ற சொல் நீக்கப்பட்டுத் 'தேவன்' என்ற சொல் சேர்க்கப் பட்டிருந்தது. ஆகவே, இவ்வாறு மாற்றப்பட்டது ஏனென்று விசாரித்தேன். 'வைஷ்ணவன்', 'ராமன்' என்ற சொற்கள் இருப்பதனுல் இந்தப் பாட்டு இங்கு எல்லோருக்கும் பிடிப்பதில்லை என்று சொல் லப்பட்டது. எனக்கு இதிற்சந்தேகம் தோன்றி யதனுலேயே நான் இதைப்பற்றி விசாரித்தேன்..... இது தவருன வழி என்று எனக்குத் தோன்றுகின் றது. நோக்கத்தைப் பற்றிய வரையில் இந்த வழி

சரியல்ல. நாம் ஒருவர் மற்றவருடைய பெயரைச் சகிக்க முடியாதென்றால், எல்லா மதங்களிடையிலும் சமரசத்தை ஏற்படுத்துவதெப்படி? ………

"நமது மூதாதையர் செய்தவையும் நமக்குப் பிடித்தமானவையுமான பாட்டுக்களை இல்லாததெல்லாம் மாற்றுவதோ, பாடும்பொழுது சில பகுதிகளை விட்டுவிடுவதோ நல்லதல்ல………

"இது பார்வைக்கு என்னவோ சிறிய விஷயமாகத் தோன்றிய போதிலும், இதனால் பெரிய விளைவுகள் ஏற்படக் கூடும். என்னைப் பற்றிய வரையில் 'வைஷ்ணவன்' என்றாலும் 'அன்பினன்' என்றாலும் ஒன்றே.

"ஆனால், சொற்களை மாற்றுவதற்கு எந்த மனப்போக்குக் காரணமாயிருக்கிறதோ, அது பிழைபட்டது என்பது என் கருத்து.

"நான் தெரிவித்த இந்த ஒரு சில கருத்துக்களைப்பற்றி நீங்களும் ஆலோசித்துப் பாருங்கள்."

இப்பிரசங்கப் பகுதியும் சமயப் பற்றுள்ளவரின் செயலைத் தெளிவாகக் காட்டுகிறதல்லவா?

1933 ஷ ஏப்பிரல் மீ 20 உ (Vol. 6. No. 16) 'கலா நிலயம்' என்ற வார இதழில், 'சமயச் சாந்தி' என்ற தலையங்கத்தில், "தண்ணளி தழைக்கும் தமிழின் பெயரினால் புண்சில செய்வார் புந்தியை என் சொல. ஏனைய மதங்கள் எவ்வாறாயினும் தமிழினைத் தொடர்ந்து செய்கின்ற சமயப் பிணக்குக்களின் வன்மமே வேறெதற்கும் இல்லையெனலாம். 'நம்சைவ சமயம், நம் சைவ சமயம்' என்றென்று விளம்பி, பிறமதத்தினரையும், பிறமொழியினரையும், ஏனை

யோர் வழிபடுங் கடவுளர்களையும், அவர் தகவும் தருக்கமும் இன்றிப் பேசும் வண்ணம் எத்தகைய தென்பதை எடுத்துரைத்தல் மிகை. சைவ சித்தாந்தத்தின் ஆதரவின்கீழ் நடக்கின்ற மகாநாடுகளுக்குச் சென்றிருப்பவர் யாவரும் இவ்வன்மத்தின் கொடுமையை நன்கறிந்திருப்பர். வைணவ மகா சபைகளின் வாதங்கள் சைவ சித்தாந்தங்களின் ஆர்வத்திற்குக் குறைந்ததன்றாயினும், அதனிற்கிது ஒருவாறு ஆற்றத் தகுந்ததே என்றெண்ணல் வேண்டும். அந்தக் குரூரம் இதற்கும் இருக்கலாம் எனினும், அந்தப் பரிபவம் இதற்கில்லை. தமிழோடு வடமொழியையும் சார்ந்து நிற்பதால் வைணவர் தம் வாய்க்கு ஓர் வரம்பு வைத்துக்கொள்ள நேர்கின்றனர் போலும்" என்று எழுதியுள்ளது.

மகான் வண்ணச் சரபம் என்று சிறப்புற்ற ஸ்ரீலஸ்ரீ தண்டபாணி சுவாமிகள் தாமியற்றிய புலவர் புராணத்தில் பிள்ளைப் பெருமாள் ஐயங்கார் சருக்கத்தில், வைணவர்களின் இயல்பை விளக்குகின்றார். அப்பாட்டு,

> "சைவ ரிற்சிலர் தாமரைக் கண்ணனை
> வைவ தொப்ப வைணவர் யாவரும்
> மைவ னக்கள வள்ளலை நிந்தனை
> செய்வ தில்லை திருவருள் சாட்சியே"

என்பதாகும். இவ்விரண்டு மேற்கோள்களாலும் வைணவர்களது நிலைமை ஒருவாறு விளங்கும். இது நிற்க.

இனி, ஸ்ரீ வில்லிபுத்தூராழ்வார் அருளிய பாரதத்தை நோக்குவோம்: ஸ்ரீ வில்லிபுத்தூராழ்வார் வைணவப் பிராமணரென்றும் ஆழ்வார்களருளிச்

செயலில் ஈடுபட்டவரென்றும் சைவப்பெருமக்களே சொல்கின்ருர்கள். எனினும், அவர் அருளிய பாரதத்தில், சைவாபிமானிகளுட்சிலர் சில கவிகள் புனைந்தும் சில பாடல்களைத் திருத்தியும் ஷ பாரதத்தைப் பதிப்பித்து, புனைந்து சேர்த்த பாடல்களையும் திருத்திய சில பாடல்களையும் மேற்கோள்களாகக் காட்டி, 'இப்பெரியார் வைணவரே எனினும், பிறமதத் துவேஷம் பாராட்டுபவர் அல்லர்; சிவபெருமானைக் குறித்துச் சொல்லுமிடத்திலெல்லாம் சைவாகமப்படியே சொல்லியிருத்தலான்,' என்று விளக்கமாக எழுதியுள்ளனர்.

வைணவர்களுட்பெரும்பாலார் நாலாயிரத் திவ்வியப் பிரபந்தமும் அதன் அருமையுரையும் தவிர, வேருென்றையும் நோக்காரானமையும் இச் சைவாபிமானிகட்கு ஒரு வாய்ப்பாயிற்று.

அச்சியந்திரம் தோன்ரு முன்னரே இப்படித் திருத்திவிட்டதனுலும், அச்சியந்திரம் தோன்றிய பின்னரும் அந்நூலை அச்சிட்டவர்களும் அவர்களேயாதலானும், உண்மைப் பாடம் சாமானிய மக்களால் அறிய முடியாததாயிற்று.

பின்னர்ப் பல ஏடுகளையும் சோதித்து உண்மைப் பாடங்களைக் கண்டு சென்னைக் கோமளேசுரன் பேட்டையில் வாழ்ந்த இலக்கணப் பெரும் புலமை நிரம்பிய திரு. இராஜகோபாலப் பிள்ளை என்னும் பெரியார் நல்ல முறையில் ஸ்ரீ வில்லி பாரதத்தை அச்சிட்டு வெளிப்படுத்தியுள்ளார்.

அப்பதிப்பைக் குறித்துக் கீழ்வரும் குறிப்பினுல் ஒருவாறு உணரலாம் :

1905 இல் சிதம்பரம் தாலுகா பின்னத்தூர் வ. இரத்தினசாமி பிள்ளையவர்களால் சென்னைப் பண்டித மித்திர யந்திரசாலையிற் பதிப்பிக்கப்பட்டதும், திருத்தேவையெனுந் திருவிராமேச்சுரத்தைச் சேர்ந்த பாம்பன் ஸ்ரீமத் - குமரகுரு தாச சுவாமிகள் அருளிச் செய்ததுமான 'நாலாயிரப் பிரபந்த விசாரம்' என்னும் நூலில் 'அறிவிப்பு' எனும் பகுதியில் கடைசிப் பத்தி :

"ஆறுமுக நாவலர் அவர்களது வித்தியாநுபாலன அச்சுக்கூடத்திற் பதிக்கப்பட்டும் வேறு சில அச்சுக்கூடங்களிற் பதிக்கப்பட்டும் உள்ள வில்லிபுத்தூராழ்வார் பாரதத்தில் 'ஓரேனந் தனைத் தேட......வந்தான்,' எனும் அருச்சுனன் தவநிலைச் சருக்கச் செய்யுள் நவீன வைணவர் கொள்கைக்கு விரோதமாதல் கண்டு, கோ. இராஜகோபாலப் பிள்ளையென்பார் வித்தியா கலாநிதி அச்சுக்கூடத்தில் துன்மதி ௵ மார்கழி ௴ பதித்த பிரதியில் இல்லாதொழியுமாறு அதனை எடுத்துவிட்டுப் பதித்திருத்தலானும்......" என்பதனால், அம்முகவுரையாளர்க்கு இப்பாடல் ஒன்று இல்லாமை தவிர திரு. கோ. இராஜகோபாலப் பிள்ளையவர்கள் பதிப்பில் மற்றைய இடங்களில் ஒரு விரோதமும் இன்றென்பது வெளியாம். இதனாலும் இச்சைவாபிமானிகள் நிலைமை ஒருவாறு விளங்குமே !

இனிச் சைவாபிமானிகள் ஸ்ரீ வில்லி பாரதத்தைத் திருத்தினது உண்மை என்பதைச் சிறந்த சைவப் பெருமகனார் ஒருவர் வாக்கினாலேயே நாம் அறிவோம் :

இப்பொழுது இருக்கின்ற வில்லி பாரதப் பதிப்புக்களுள் மதுரைத் தமிழ்ச் சங்கப் பதிப்பொன்றே எல்லோராலும் போற்றிப் படிக்கப்படுவது. இது திருவாவடுதுறை ஆதீன வித்துவானும் மதுரைத் தமிழ்ச் சங்கத்துச் சைவ நூற்பரிசோதகருமாகிய சேற்றூர், ரா. சுப்பிரமணியக் கவிராயரால் பரிசோதித்து மேற்படியார் எழுதிய அரும்பதவுரையுடன் வெளியிடப் பெற்றது; மிகச் செப்பமான பதிப்பு.

இப்பதிப்பை ஆதாரமாகக் கொண்டே இக்காலவுரையாசிரியரான ஸ்ரீ. வை. மு. கோபால கிருஷ்ணமாசாரியார் அவர்கள் வில்லி பாரதத்துக்கு உரையெழுதி வெளியிட்டிருக்கிறூர்கள். அவராலும் அவர்தம் ஆசிரியன்மாரான ஸ்ரீ. உ. வே. வை. மு. சடகோபராமாநுஜாசார்ய ஸ்வாமிகளாலும், ஸ்ரீ. சே. கிருஷ்ணமாசார்ய ஸ்வாமிகளாலும் அரசாங்கத்தாரால் கலாசாலைக்குப் பாடங்களாக வைக்கப்பட்ட பகுதிகளுக்கு உரை எழுதியவை போக மிகுதியுள்ள பகுதிகளுக்கும் ஷெ ஸ்ரீ வை. மு. கோபால கிருஷ்ணமாசார்யார் அவர்கள் உரையெழுதி வெளியிட்டனர். இதை அவரே குறிப்பிடுகின்றூர். எனினும், சங்கப் பதிப்பை ஒட்டிய பாடங்களை அவர் கொள்வதனாலும், கலாசாலைகட்கு வைத்த பாரதப் பகுதிகட்கு விரைவில் உரையெழுதி வெளியிட வேண்டி வந்தமையாலும், நூலாசிரியர் வைணவ சமயத்திற்கு இழுக்காகவும் சைவசமயத்திற்கு ஏற்றமாகவும் அமைத்தனவாக உள்ள கவிகட்குப் பொருள் எழுதுமிடத்தும் சமாதானம் கூறுமிடத்தும் மிக்க இடர்ப்படும் நிலையானும் அவர்கள் திருவுள்ளமும் சில இடங்களில் புண்பட்டுள்ளது என்பது உரையினைக் காண்பார்க்கு விளங்காமற்போகாது.

சங்கப் பதிப்பை வெளியிட்ட அறிஞர் திரு. சேற்றூர் ரா. சுப்பிரமணியக் கவிராயர் அவர்கள் முகவுரையில் தம் பதிப்பைக் குறித்துக் கூறும் போது '......சுவமதக் கொள்கை பரமத துவேஷம் என்பவற்றையுட்கொண்டு பாடங்களைச் சிதை யாமற் பிரதிகளில் உள்ளவற்றை உள்ளவாறே ஆராய்ந்து பிறழாமலவைகள் வெளியிடப்பட்டன; இங்ஙனம் கூறுவது உண்மையேயாமென்பது, அருச்சுனன் தவநிலைச் சுருக்கம் 107-ஆங் கவியை யும், கிருட்டிணன் தூதுச் சருக்கம் 15-ஆங் கவி யையும், பதின்மூன்றும் போர்ச்சருக்கம் 205-ஆங் கவி முதலாகிய சில கவிகளையும் நோக்குவோர்க்கு வெள்ளிடைமலை போல நன்கு விளங்கும்,' என்று கூறியிருக்கின்றார்.

இதில் 'சுவமதக் கொள்கை பரமத துவேஷம் என்பவற்றையுட்கொண்டு பாடங்களைச் சிதையா மற்பிரதிகளிலுள்ளவற்றையுள்ளவாறே யாராய்ந்து பிறழாமலவைகள் வெளியிடப்பட்டன,' என்றமை யான், இதற்கு முன் பதிப்பித்த பாரதப் பதிப் பாசிரியர்கள் சுவமதக் கொள்கை பரமதத் துவே ஷம் முதலியவற்றை உட்கொண்டு பாடங்களைச் சிதைத்துப் பிரதிகளிலுள்ளவற்றை உள்ளவாறே பதிப்பியாமல் வெளியிட்டனர் என்பது சொல்லா மலே விளங்குகின்றதல்லவா?

இச்சங்கப் பதிப்பாசிரியர் அங்ஙனமுடையவ ரல்லர் என்பதை அருச்சுனன் தவநிலைச் சருக்கம் 107-ஆங் கவி, கிருட்டிணன் தூதுச் சருக்கம் 15-ஆங் கவி, பதின்மூன்றும் போர்ச்சருக்கம் 215-ஆங் கவி முதலிய சில கவிகளையும் நோக்கி அறியலாம் என்று கூறுகின்றதைப் பார்ப்போம்:

அருச்சுனன் தவநிலைச் சருக்கம் 107-ஆங்கவி,

"விண்ணிலுறை வானவரில் யாரடி
    படாதவர் விரிஞ்சன்முத லோர்உததிசூழ்
மண்ணிலுறை மானவரில் யாரடி
    படாதவர் மனுக்கள் முதலோர்கள்..."

என்பதில் முதலடியின் கடைசியில் 'விரிஞ்சன் அரியே முதலினோர்' என்று தமக்கு முன்னுள்ள பதிப்பாசிரியர்கள் திருத்திய பாடங்கொள்ளாமல் உள்ளவாறே பதிப்பித்திருக்கின்றார். இதில் சிவ பெருமான் அருச்சுனனால் அடியுண்டபோது விண்ணிலுறை வானவரில் யாவரும் அடிபட்டனர் என்று கூறவேண்டுமிடத்து 'அரியே முதலினோர்' என்று கூறியிருக்க மாட்டார் என்ற கருத்துக் கொண்டுதானே, 'அரியே முதலினோர்' என்ற திருத்தத்தை விட்டுவிட்டு 'விரிஞ்சன் முதலோர்' என்ற உண்மைப் பாடத்தை இவர் கொண்டிருக்கின்றார்?

இவ்வாறு உண்மைப் பாடத்தைப் பதிப்பித்தவர், அருச்சுனன் தீர்த்த யாத்திரைச் சருக்கம் 18-ஆங் கவி,

"இன்னம்பல பலயோனியி லெய்தாநெறி பெறவே
முன்னம்பல ரடிதேடவு முடிதேடவு மெட்டா
அன்னம்பல பயில்வார்பொழி லணிதில்லையு ளாடும்
பொன்னம்பல நாதன்கழல் பொற்போடுப ணிந்தான்."

என வருமிடத்து, 'முன்னம்பல ரடிதேடவு முடிதேடவு மெட்டா ........பொன்னம்பல நாதன்' என்பதற்கு ஈடாக இருக்கவேண்டிய உண்மைப் பாடத்தையும்,

அருச்சுனன் தவநிலைச் சருக்கம் 57-ஆங்கவி,

"உள்ளுறக் கலக்க மறத்தெளிந் தசலத்
துயர்தலை முழையினின் றருவி
வெள்ளமொத் தமுதம் கரையறப் பொழிய
வெம்மையற் றளியுடன் குளிர்ந்து
புள்ளுடைக் கொடியோ ரிருவரும் காணுப்
புண்ணியன் பொருப்பிடைத் தவஞ்செய்
வள்ளலொத் தனஅச் சாரலைச் சூழ்ந்து
வயங்குநீள் வாவியும் சுனையும்."

என்பதில் 'புள்ளுடைக் கொடியோ ரிருவரும் காணுப் புண்ணியன்' என்ற இடத்தில் இருக்க வேண்டிய உண்மைப் பாடத்தையும், மேற்படி சருக்கம் 87-ஆங் கவியாகிய,

"ஓரேனந் தனைத்தேட ஒளித்தருளு மிருபாதத்
தொருவ னந்தப்
போரேனந் தனைத்தேடிக் கணங்களுடன் புறப்பட்டான்
புனங்க ளெல்லாம்
சீரேனல் வினைகிரிக்குத் தேவதையாங் குழவியையும்
செங்கை யேந்திப்
பாரேனை யுலகனைத்தும் பரிவுடனே ஈன்றுள் தன்
பதிபின் வந்தாள்."

என்ற பாடல் செருகு கவியாயிருக்குமென்பதை யும், இவ்வாறே அருச்சுனன் தீர்த்த யாத்திரைச் சருக்கத்திலும் 13-ஆங் கவி முதல் 17-ஆங் கவி வரையுள்ள பாடல்களும் செருகு கவிகளாயிருக்கு மென்பதையும் ஆராய்ந்து தெரிவிக்காமற்போன காரணம் என்னே! ஆராய்ந்து காண்க.

கிருட்டிணன் தூதுச் சருக்கம் 15-ஆங் கவி யில், 'நீர்முடித்தா னிரவொழித்த நீ' என்ற உண்

மைப் பாடத்தை வெளியிட்டும், வைணவ சம்பிர தாயத்திற்கு மாருக, அரும்பத உரையில் 'அக்கதை யைக் காஞ்சிப் புராணம் வயிரவீச்சுரப்படலம் முதலியவற்றிற்காண்க; சிலர் வேறு கூறுவர்,' என்று குறித்திருப்பதென்னே! ஆய்க.

பதின்மூன்ரும் போர்ச்சருக்கம், 205-ஆங் கவி முதலிய சில கவிகள் உண்மைப் பாடங்களே. ஒரு சில திருத்தம் தவிர இவ்விடத்தில் இவர் உள்ள படி வெளியிட்டமைக்கு வைணவவுலகம் இவர்க்கு நன்றி செலுத்தும் கடப்பாடுடையதாகும். இவ் விடத்து முற்பதிப்பாசிரியர்கள் செருகிய பாடல் களை நீக்கிவிட்டமைக்கு இவரை மனமாரப் போற்ற வேண்டியவராவோம்.

முதல் இரண்டிடங்களிலும் இவர் கொண்ட கொள்கைக்கு மாருகப் பின் வரும் பாடல்களை ஆதாரமாகக் கொண்டு இவ்வில்லிபுத்தூராழ் வாரைப் பற்றிச் சொல்லுமிடத்து 'இந்நூலுட் சைவ சம்பந்தமாய் வரும் பல்வேறிடங்கள்தோறும் உள் ளபடியே உயர்த்திக் கூறியமை கொண்டு இவர் மத விஷயங்களிற் பொது நோக்குடையரென்பது தெளிவாக விளங்கும்,' என்று குறிப்பிடுகின்ருர். இவற்றின் உண்மையையும் ஆராய்வோம் :

'இந்நூலுட்சைவசம்பந்தமாய் வரும் பல்வே றிடங்கள்தோறும் உள்ளபடியே உயர்த்திக் கூறி யமை' எங்கு, எப்படி என்பது தெரிந்தால் அது விளங்கும்.

அருச்சுனன் தீர்த்த யாத்திரைச் சருக்கம் 18-ஆங் கவி.

"இன்னம்பல பலயோனியில் எய்தாநெறி பெறவே
முன்னம்பல ரடிதேடவும் முடிதேடவும் எட்டா
அன்னம்பல பயில்வார்பொழில் அணிதில்லையுள் ஆடும்
பொன்னம்பல நாதன்கழல் பொற்போடு பணிந்தான்."

என்பதில், 'திருமால் பன்றியுருவங்கொண்டும், பிரமன் அன்னவுருவங் கொண்டும் முறையே அடியு முடியும் காண்பேமென்று முயன்ற போது அவர்கள் கண்களுக்ககப்படா வண்ணம் உயர்ந்தவன் சிவபிரான்,' என்ற கதையை வைணவப் பெரு மக்கள் ஒத்துக்கொள்ளமாட்டார்கள். இக்கதை சைவப் பெருமக்கள் வழங்குவது. 'இதை வைணவ ராகிய வில்லிபுத்தூராழ்வார் ஒத்துக்கொண்டு பாடியிருக்கின்ருர். ஆதலின், இவர் சிவத்துவேஷம் பாராட்டாத வைணவர்' என்று உயர்த்திக் கூறு கின்றனர் போலும் !

'முன்னம்பல நறுமாமலர் முறைதூய்மகிழ் வெய்தா' என்ற அடியை மாற்றி இவர்க்கு முன் னுள்ள சைவர்கள் திருத்தியபடியே 'முன்னம்பல ரடிதேடவு முடிதேடவு மெட்டா' என்றே இவர் பதிப்பித்திருக்கின்ருர்.

அருச்சுனன் தவநிலைச்சருக்கம் 57-ஆங் கவி யில் உள்ள பாடம், 'உள்ளுறக் . . . . புள்ளுடைக் கொடியோற் றருமுமை பங்கன் புண்ணியப் பொருப்பு' என்பதாகும். இதையும் ஆய்ந்து காணு மல், முன்னேர் திருத்திய முறையே பதிப்பித்திருக் கின்ருர்.

மேற்படி சருக்கம் 87-ஆங்கவி, "ஓரேனந் தனைத்தேட ஒளித்தருளு மிருபாதத் தொருவன் . . . தன் பதிபின் வந்தாள்" என்ற பாடல்.

வில்லிபுத்தூராழ்வார் பாடலில் ஈடுபட்டுள்ள வர்களுக்கு இப்பாடல் அவருடையதன்று என்பது விளங்கும். இப்பாடலைப் புதியதாகப் புனைந்து சேர்த்த முன்னோரின் நடையையே ஒட்டி இப் பாடலைச் சேர்த்து வெளியிட்டதோடன்றி ஸ்ரீவில்லி புத்தூராழ்வார் சிவத்துவேஷம் பாராட்டாத வைஷ்ணவரென்று உயர்த்திக் கூறிவிட்டமை யானே திருத்தங்களும் செருகு பாடலும் நிலையாய் விடும் என்பது கருத்துப் போலும்!

'ஓரேனந் தனைத்தேட ஒளித்தருளு மிருபாதத் தொருவன்' என்னுமிடத்து 'யாரேனுந் தனைத்தேடி னளித்தருளு மிருபாதத் திறைவன்' என்று பிரதி பேதமும் ஒருவர் காட்டுகின்றார். ஒருவேளை அப்படி இருப்பினும் இருக்கலாம். அதாவது, தன்னை வணங்குபவர்கள் தீய எண்ணம் உடையவர்களா யிருந்தாலும் அவர்கள் எண்ணத்தைக் கருதாமல் அவர்கள் வெளிக்குக் காட்டும் ஒரு முகமான தவத் திற்குவந்து அருள்செய்வது சிவபெருமான் இயல்பு என்பதனை விருகாசுரன், இரணியன் முதலான வர்கள் கதையாலும் உணரலாம். இதனை ஒருவாறு திருவுளத்துக்கொண்டு 'யாரேனும் தனைத்தேடின் அளித்தருளு மிருபாதத் திறைவன்' என்றும் கூறி யிருக்கலாம் அன்றோ? எப்படியாயினும், இப் பாடல் இல்லாமலே கதைப் போக்குக் கெடாமை காணலாம்.

மேற்படிச் சருக்கம் 113-ஆங்கவி,

"வெய்யகண நாதர்கண தேவர்விபு தாதியர்வி
 ரிஞ்சிசிவ யோகி யரருஞ்
செய்யசுட ரோனளகை யாதிபதி கின்னரர்கள்
 சித்தர்பலர் சார ணரொடும்

பையரவி ஞடிபுரு கூதனிவர் சூழ்தரஓர்
 பச்சைமயில் பாதி யுடனே
துய்யவிடை மீதொரு செழுஞ்சுடரெ ழுந்ததுதொ
 ழுந்தகைய தாகு மளவோ.''

என்பது. இப்பாட்டில் முறையே விரிஞ்சி என்ற சொல்லை அடுத்து இருக்கவேண்டிய திருமாலை விட்டுவிட்டமையால், திருமாலொடும் வந்தார் என்று சொல்லக் கருத்துக்கொண்டு மிக முயன்று பார்த்து 'கின்னரர், சாரணர், நாகர் என்ற பைய ரவிஞடர்' என்று வரிசைப்பட வந்திருப்பதையும் நோக்காது, திருமாலையும் சேர்க்க வேண்டுமென்ற ஒரே கருத்தால், 'பையரவிஞடர்' என்பதனைப் 'பையரவிஞடி' எனத் திருத்திப் பதிப்பித்து மகிழ் வாராயினர். இது திருத்தப்பட்டதுதான் என்பது ஏட்டுப் பிரதியின் துணையின்றியே சிறிது ஊன்றி நோக்குவார்க்கும் விளங்காமற்போகாது. இவ்விரு பாடல்களையும் முன்ஞேர் திருத்தியபடியே இச் சங்கப் பதிப்பாசிரியர் வெளியிட்டிருக்கின்ருர்.

இவைகளால் சங்க பாரதப் பதிப்பாசிரியரும் சுவமதக் கொள்கை பரமதத் துவேஷம் உடையவர் என்பதனையறியலாமே! அன்றியும், சிவபிரானைச் சொல்லுமிடத்தில், 'ஒரு வைணவப் பெரியார், திரு மாலாலும் பிரமனுலும் காணப்படாதவர் சிவபெரு மான்' எனச் சமநோக்கோடு சைவ சம்பிரதாயக் கருத்துக்கு மாருமற் சொல்லுகின்ருர் என்ருல், அப்பொது நோக்குடைய வைணவப் பெரியார் திருமாலைக் கூறும் பொழுது 'சிவபெருமானுலும் காணப்படாதவர் திருமால்' என்று சொல்லக் கூடுமன்றே? அவ்வாறு கூறுமிடத்தில் சிவன்

என்ற சொல்லை எடுத்துவிட்டுத் தவர், முனிவர் என்ற சொற்களைச் சேர்த்துத் திருத்தியிருக்கின் றனர் என்பதை யாவரும் எளிதில் உணரலாம்.

'சிவ்னும் வணங்கும் திருமால்' என்ற இடத் தைக் கண்டு அது பொருதவர்களாய் அப்படிப் பட்ட இடங்களைத் திருத்தியிருக்கின்றார்கள் என் றால் அச்சைவாபிமானிகள் சிவ சம்பந்தமாக வரு மிடத்துத் திருமாலால் காணப்படாதவன் சிவபெரு மான் என்று ஏன் திருத்தியிருக்க மாட்டார்கள்? இதை அறிஞர்கள் ஆராய்ந்து உண்மை காண் பார்களாக. அப்படித் திருத்திய இடங்கள்:

கண்ணபிரான் தூதுச் சருக்கம், 213-ஆங்கவி,

"தேவரும் வாசவ னும்தவ ரும்திசை முகனுந ராதிபரும்
யாவரு மன்பினெ டாயிர நாமமு மெண்ணியி றைஞ்சுதலால்
மூவரு மொன்றென நின்றரு ளுதனு முனிவுத விர்ந்தருளா
மீவரு மண்டமு முந்திரு மேனியொ டுங்கினன் மீளவுமே."

என்பது. சைவப் பெருமக்கள் சிவபெருமானைக் குறிக்குமிடத்து, 'பிரமனும் திருமாலாலும் அறி யப்படாதவர்' எனவும், அங்ஙனமே வைணவப் பெருமக்கள் திருமாலைக் குறிக்குமிடத்து, 'பிர மனும் சிவபிரானும் அறியப்படாதவர்' என வும் சொல்வது பெருவழக்காறு. இவர்களோடு இந்திரனையும் சேர்த்துக்கொள்வதுண்டு. தேவர் மூவர் என்பது சிவபெருமான், திருமால், பிரமன் என்பவர்களையே குறிக்கும். ஈதிங்ஙனமாக, 'தேவரும் வாசவ னும்சிவ னும்திசைமுகனும்' என் றிருந்ததைப் பொருது, 'சிவனும்' என்ற சொல்லை நீக்கித் 'தவரும்' என்று புகுத்தியுளார்கள். முறைப்

படியே நோக்கினும் 'வாசவன்', 'திசைமுகன்' இவ் விருவர்க்கும் இடையில் ஏற்றமுள்ள 'சிவன்' என்ற சொல் இருக்கவேண்டுமேயன்றித் 'தவரும்' என்ற சொல் வரவேண்டுவதில்லையே !

8-ஆம் போர்ச்சருக்கம் முதற்கவி,

'பூத்த நாபியந் தாமரைப் பூவில் வந்துபல் பூதமும்
சேர்த்த நான்முகப் புனிதனு முனிவர் யாவரும் தேவரும்
ஏத்த நாலுவே தங்களும் தேட நின்றதா ளெம்பிரான்
பார்த்தன் மாமணித் தேர்விடும்பாக னுனதெப் பான்மையே'

என்பது. இதில் 2-ஆவது அடியில் 'சேர்த்த நான் முகப் புனிதனும் சிவனும் யாவரும் தேவரும்' என்ற பாடத்தில் 'சிவனும்' என்ற இடத்தில் 'முனி வர்' என்ற சொல்லைப் பெய்து முன்னோர் பதிப்பித் தது போலவே பதிப்பித்திருக்கின்றார். இவற்றுக்கு ஏட்டுப் பிரதியின் துணை கூட வேண்டுவதில்லையே!

12-ஆம் போர்ச்சருக்கம் 59-ஆங் கவியாகிய 'அவன் விட்ட சுடுகணைகள்' என்ற முதற் குறிப்புள்ள பாடலில் மூன்றாவது அடியில் 'சிவ முற்ற மலரிலுறை பிரமற்கு மறிவரிய திகிரிக்கை வலவன்' என்று பதிப்பித்திருக்கின்றார். முன்ன ருள்ள சில அச்சுப் புத்தகங்களிலும் நல்லாப்பிள்ளை பாரத அச்சுப் புத்தகத்திலுங்கூடச் 'சிவனுக்கு மலரிலுறை பிரமற்கு மறிவரிய திகிரிக்கை வலவன்' என்றிருக்கவும், இப்பதிப்பாசிரியரும் 'அப்படியும் பாடமிருக்கிறது' என்று காட்டியும், 'சிவமுற்ற மலரி லுறை பிரமற்கும்' என்றே பதிப்பித்திருக்கின்றார். 'சிவனுக்கும் மலரிலுறை பிரமற்கும்' என்று எண் ணும்மையாக இருப்பதை மாற்றி, 'சிவமுற்ற மலரி

லுறை பிரமற்கும்' என்று உயர்வுசிறப்பும்மையாக் கினமையால் சிவனேவிடப் பிரமன் உயர்ந்தவன் என்ற கருத்து இவர்க்குளது போலும்!

இப்படித் திருத்தியவற்றையெல்லாம் இவர் உடன்பட்டுப் பதிப்பித்துள்ளதனுல், இவர்க்குச் சுவமதக்கொள்கை பரமதத் துவேஷம் இல்லை என்பதை எவர்தாம் ஒப்புக்கொள்வர்?

இதுகாறும் கூறியவாற்ருன், வைணவர்கள் புறக்கணித்தமையால் வைணவ நூல்கள் பலவற் றின் தமிழ் நயமுணர்ந்த சைவப் பெரியார்கள் அந் நூல்களில் நுழைந்து தமது சைவாபிமானத்தை அவற்றிற் புகுத்தி, அதைப் பிரசாரம் செய்து, 'வைணவத் தமிழர்கள்கூடச் சிவபெருமானைத் தங்கள் திருமாலினும் ஏற்றமாகவே கூறியுள்ளார் கள்; அவர்கள் எல்லோரும் சைவ வைணவ வேறு பாடில்லாதவர்கள்,' என்று அவர்களைப் புகழ்வது போலத் தமது சைவாபிமானத்தைத் திறம்படக் காட்டியுள்ளார்கள் என்பதும், அதிலும் சிறப்பாகப் பாரதத்தே அவர்கள் திருத்திய இடங்களிற் சிலவற் றைக் காட்டி அப்பாடங்களிற் சிறந்தன இன்ன இன்ன என்பதும் விளக்கமாகக் கண்டோம்.

இதனுல் ஒவ்வொரு வைணவரும் பொது நோக்குடைய சைவப் பெருமக்களும், உண்மை யுணர்ந்து, நல்ல திருத்தமுள்ள ஒரு பாரதப் பதிப்பு வெளிவர உதவி செய்வார்களாக என அனைவரை யும் வேண்டுகின்றேன்.

இதனுடன் என் ஆசிரியப் பெருமானிடத்து நான் பயில்வதற்கு முன்னமே பயின்றவரும்,

எனக்கு ஆசிரியரை ஒத்தவரும் ஆகிய அறிஞர் காலஞ்சென்ற உயர்திரு. தேசிக சடகோப பிள்ளையவர்கள் (வளவனூர் – தென்னார்க்காட்டு மாவட்டம்) அரிதின் முயன்று தொகுத்து வைத்திருந்த சில பாட பேதக் குறிப்புக்களில் சங்கப் பதிப்பில் திருந்தினது போக மிகுதியுள்ளவற்றை இதன் கீழ்க் குறிப்பிடுகின்றேன் :

## திருத்தஞ் செய்யவேண்டிய இடங்கள் :

### பாயிரம்

'நீடாழி' என்ற பாடலை வில்லிபுத்தூராழ்வார் செய்யவில்லை; வரந்தருவார் செய்தார் என 'அபிதான கோசம்' என்ற நூல் விளக்குகிறது.

'முருகார் மலர்த்தாமம்' என்ற பாடல் ஏடுகளில் இல்லை.

'ஆக்குமாறயனும்' எனும் செய்யுளில் 'வீந்த நாளுந்தி' என்பது 'வீந்தநாள் மீள' என்று மாற்றப் பட்டிருக்கிறது. உந்தி என்பதற்கு ஆதாரமாக, வேத்திரகீயச் சருக்கம் 65-ஆம் பாடலில் 'சக மலர்ந்த திருவுந்திமால்' எனவும் கண்ணபிரான் தூதுச் சருக்கம் 115-ஆம் பாடலில் 'உலகெலா முதவு முந்தியான்' எனவுமிருப்பவை காண்க.

ஆதி பருவம், சம்பவச் சருக்கம், 10-ஆம் பாடலில், ஏட்டுச் சுவடியில், 'தொழுது நெற்றியின் புழுதி யால்' என்றும், 'தொழுது நெற்றியின் வியர்வை யால்' என்றும் பாடங்கள் இருக்கின்றன. அச்சுப் புத்தகத்தில், 'தொழுது நெற்றியின் விபூதியால்' என்றிருக்கிறது.

இந்திரப் பிரத்த சருக்கம், 1-ஆம் பாடலில், ‘ஆழியான்’ என்பது ஆதியான் என அச்சுப் புத்தகத்தில் மாற்றப்பட்டிருக்கிறது.

அருச்சுனன் தீர்த்த யாத்திரைச் சருக்கம் : 18-ஆம் பாடலில், 2-ஆவது அடி, ஏட்டில், ‘முன்னம்பல நறுமாமலர் முறைதூய்மகிழ் வெய்தா’ என்றிருக்கிறது. அச்சுப் பிரதியில், ‘முன்னம்பல ரடிதேடவு முடிதேடவு மெட்டா’ என்றுளது. இதன் கீழ்,

“மாவிந்தையு நிலமங்கையு மலர்மாணடி வருடத்
தாவும்மர வணைமேல்விழி துயிலுந்தனி முதலைப்
பூவுந்திய பொழில்சூழ்தரு பொற்சித்திர கூடக்
கோவிந்தனை யடிபன்முறை தொழுதுட்களி கொண்
[டான்.”

என்னும் பாடல் ஏட்டில் உள்ளது.

ஏட்டில், காண்டவ தகனச் சருக்கம், 18-ஆம் பாடலில், ‘விளிவுடைச் சரபங்கள்’ என்பது ‘விளிவுடைச் சவரங்கள்’ என அச்சில் மாற்றப்பட்டிருக்கிறது.

சபா பருவம் : இராயசூயச் சருக்கம், 139-ஆம் பாடலில், 3-ஆவது அடி, ஏட்டில், ‘ஆவியுமுணர்வு மொன்றுபட் டிதயத்தமர்ந்துறை யாடகச் சோதி’ என்றிருக்கிறது.

அச்சில், ‘ஆவிக ளனைத்து நிறைந்தொளி சிறந்த
அச்சுத னலைகொள்பாற் கடலில்.’

என்றுளது.

143-ஆம் பாடலில், 2-ஆவது அடி, ஏட்டில், 'பங்கயச் சரணம் சிந்தனு சிந்தையனுகித் துய்ய செய் தவத்துத் துருவாச முனிவன்......தொழவருகாலை வைகுந்த' என்றிருக்கின்றது. இது சங்கப் பதிப்பில் பாட பேதமாகக் காட்டப்பட்டுள்ளது.

அச்: 'பங்கயக் கண்ணன் திருமகள்
கொழுநனைக் காணத்
துய்யசெய் தவத்துத் துருவாச முனிவன்
சேறலும் சுடர்கொள்வை குண்ட'

145-ஆம் பாடலில், ஏட்டில், 'என்றலும் முனியும் தொழுது' என்றிருக்கின்றது.

அச்: 'என்றலும் முனிவன் பரிந்திவ ரெழுகால்'

ஆரணிய பருவம், அருச்சுனன் தவநிலைச் சருக்கம், 57-ஆம் பாடலில், 3 ஆவது அடி, 'புள்ளுடைக் கொடியோற் றருமுமை பங்கன் புண்ணியப் பொருப்பிடை' என்றிருக்கின்றது.

அச்: 'புள்ளுடைக் கொடியோ ரிருவருங் காணுப்
புண்ணியன் பொருப்பிடை.'

70-ஆம் பாடலில் 3-ஆவது அடி, 'ஆசறு கடவுளன்ன அருந்தவர் தமக்கு மெட்டா' என்றிருக்கின்றது.

அச்: 'ஆசறு கடவு ளோர்க்கும்
அருமறை தனக்கு மெட்டா.

87-ஆம் பாடலில், முதல் அடி, 'யாரேனும் தனைத்தேட அளித்தருளு மிருபாதத் திறைவன்" என்றிருக்கின்றது.

அச்: 'ஓரேனந் தனைத்தேட ஒளித்தருளு
மிருபாதத் தொருவ னந்தப்'

106-ஆம் பாடலில், 2-ஆவது அடி, 'மோது முன மேமுடி கிழிந்ததுயர் கண்ணி மதியின்' என்றிருக்கின்றது.

அச்: 'மோதுமு னிழந்ததுயர் கண்ணிபடு பீலி'

112-ஆம் பாடலில், 3-ஆவது அடி, 'எண்ணரிய ஞானமுடை யோகியர்கள் பேசவரு மெயினர்பதி' என்றிருக்கின்றது.

அச்: 'எண்ணரிய ஞானவொளி யாகிவெளி
யாகிவரு மெயினர்பதி'

113-ஆம் பாடலில், 3-ஆவது அடி, 'பையரவி ஞடர்' எனவும், 4-ஆவது அடி, 'துய்யவிடை மீதொரு செழுஞ்சுடர் நிகர்க்கவரு தூயவனெதிர்ந்த அளவே' எனவுமிருக்கின்றன.

அச்: 'பையரவி ஞடிபுரு கூதன்'

'துய்யவிடை மீதொரு செழுஞ்சுட
ரெழுந்தது தொழுந்தகைய தாகுமளவோ.'

119-ஆம் பாடலில், ஈற்றடி, 'மெய்யனே மாசற விளங்கு மெய்யனே' என்றிருக்கின்றது.

அச்:

'மெய்யனே எங்குமாய் விளங்கு மெய்யனே.'

நிவாதகவசர் காலகேயர் வதைச் சருக்கம்:

11-ஆம் பாடலில், 3-ஆவது அடி, 'அருமறை முதலை நட்டாய்' என்றிருக்கின்றது.

அச்: 'அருமறை முறையே பார்க்கின்'

14-ஆம் பாடலில், முதலடி, 'அலருளோனும்' என்றிருக்கின்றது.

அச்: '.........ஆழியானும்'

புட்ப யாத்திரைச் சருக்கம்:

30-ஆம் பாட்டின் கீழ்,

'மறைக்கு நாயகன் வரம்பிலா ஞானமெய்ச் செல்வத்
துறைக்கு நாயகன் சுருதிசொல் மூவர்முத் தொழிலின்
நிறைக்கு நாயகன் ஆகிய நெடியவற் பிடரின்
பொறுக்கு நாதனை இகழ்ந்தனை அறிவிலாய் போலும்.''

என்னும் பாட்டு ஏட்டில் இருக்கின்றது; அச்சில் இல்லை.

139-ஆம் பாடலில், 3-ஆவது அடி, 'தோகை மார்பன்' என்றிருக்கின்றது.

அச்: 'தோகை பாகன்'

துருவாசமுனி சருக்கம்:

6-ஆம் பாடலில், 3-ஆவது அடி, 'மருதிற் கிடைபோம் பரம்பொருளே' என்றிருக்கின்றது.

அச்: 'மருதிற் கிடைபோ மவன்விரைந்து'

நச்சுப்பொய்கைச் சருக்கம்:

4-ஆம் பாடலில், 1-ஆவது அடி, 'கலந்தணிந் தொளிகூரும்' என்றிருக்கின்றது.

அச்: 'கலந்துநீற் றொளிகூரும்.'

16-ஆம் பாடலில், 3-ஆவது அடி, 'முப்பாலி னுக்கு முதன்மாலாம் முகுந்தனருளான் முறைகாக் கும்' என்றிருக்கின்றது.

அச்: 'முப்பாலினுக்கு முதற்பாலாய் மும்மைப் புவனங் களுங்காக்கும்.'

விராட பருவம் : வெளிப்பாட்டுச் சருக்கம் :

18, 19 எண்ணுள்ள இருபாடல்களும் ஏட்டில் இல்லை.

உத்தியோக பருவம் : கண்ணபிரான் தூதுச் சருக்கம் :

213-ஆம் பாட்டில், 'தேவரும் வாசவ னும்சிவ னும்திசை முகனும்,' 'தேவரும் வாசவ னுர்திக மூமையவள் தேவனு நான்முகனும்' என்ற பாடங் கள் உள்ளன.

அச்: 'தேவரும் வாசவ னுந்தவ ருந்திசை முகனும்'

துரோண பருவம் : 12-ஆம் போர்ச் சருக்கம் :

59-ஆம் பாடலில், 3-அவது அடியில், 'சிவ னுக்கு மலரிலுறை பிரமற்கும்' என்பது பாடம்.

அச்: 'சிவமுற்ற மலரிலுறை பிரமற்கும்'

75-ஆம் பாடலில், 'கிரிவெஞ் சரபந் தனைக் கரிகள்' என்பது காணப்படுகிறது. இப்படியே அச்சிட்ட நல்லாப் பிள்ளை பாரதத்திலும் உளது.

அச்: 'கிரிவெஞ் சரபந் தனையரிகள்'

இன்னம், புட்ப யாத்திரைச் சருக்கம் 39-ஆம் கவி, 'சீயத் தாலர சிழந்திடும் சிம்புளே றனையான்' என்பதும், 13-ஆம் போர்ச் சருக்கம் 124-ஆவது பாடலில் 'முதுகு கண்டபிற் சரபம தெனும்வகை' என்பதும் காண்க.

13-ஆம் போர்ச் சருக்கம் :

189-ஆம் பாடல், ' இந்திரன் காக்கினும் ஈசன் காக்கினும் ' என்பது, சங்கப் பதிப்பில் பாடபேத மாகக் காட்டப்பட்டுளது.

அச்: 'இந்திரன் காக்கினு மியமன் காக்கினும்'

213-ஆம் பாடல், 4-ஆவது அடி, 'சீதர நீவந் கென்று தழீஇயுரை செய்தனன் மீளவுமே' என்பது. இது சங்கப் பதிப்பில் பாட பேதமாகக் காட்டப்பட்டுள்ளது.

அச்: 'சீதர நின்பத மேவுக என்றருள்
செய்து விடுத்தனனே.'



---

பிழைதிருத்தம்

12-ஆம் பக்கம் 28-ஆம் வரியில் ரகறத்திற்கு என்பதை ரகரத்திற்கு எனவும்,

17-ஆம் பக்கம் 14-ஆம் வரியில் பழித்து என் பதைப் பறித்து எனவும் திருத்திக்கொள்க.

இந்நூல் கிடைக்குமிடம் :

(1) திரு. வேங்கடசாமி ரெட்டியார்,
வி. பூதூர், ஷை P. O.
வளவனூர் வழி,
தென்னார்க்காட்டு மாவட்டம்.

(2) திரு. K. நாராயண ரெட்டிகாரு,
மாளிகைமேடு, ஷை P. O.
பண்ணுருட்டி வழி,
தென்னார்க்காட்டு மாவட்டம்.